[8th September 1958

SRI K. B. S. MANI : இப்பொழுது அதிகமாக சுயமரியாதைத் திருமணங்களும், புரோகிதர் இல்லாத திருமணங்களுந்தான் நடை பெற்றுக் கொண்டு வருகின்றன. பேப்பர்களில் பார்த்தால் அதில் வருகிற பல திருமணங்களும் புரோகிதர் வைத்துச் செய்யாததினால் அத்திருமணங்கள் செல்லுபடியாகாது என்றும் அப்படி அவர்களுக்கு குழைந்தைகள் பிறந்தால் கூட, அப்பெண்கள் அவர்களது மனைவிகள் அல்ல என்று ஜட்ஜ்களால் தீர்ப்பளிக்கப்படுகிறது. ஆகவே கட்டாயமாக ரெஜிஸ்டர் செய்து கொள்ள வேண்டுமென்று இருந்தால் கூட ஆயிரக்கணக்கான மக்கள் ரெஜிஸ்டர் செய்து கொள்ளாமல் இருக்கின்றனர். ஆகவே, தாலி கட்டினால் அவள் உண்மையிலே மனைவி என்ற திருத்தத்தை சர்க்கார் அமுலுக்குக் கொண்டு வருமா ?

THE HON SRI M. BHAKTAVATSALAM : இம்மாதிரி திருமணங்களை ரெஜிஸ்டர் செய்து கொள்வதில் கஷ்டம் ஒன்றும் இல்லை. அங்கத்தினர் அவர்களே சமீபத்தில் திருமணம் செய்துகொண்டார்கள். அவர்கள் ரெஜிஸ்டர் செய்து கொண்டாரா இல்லையா என்று தெரியாது. அவர்களைப் போன்றவர்கள் மற்றவர்களுக்குச் சொல்லி இம்மாதிரி திருமணங்களை ரெஜிஸ்டர் செய்து வைப்பதுதான் நல்லது.

*Sandalwood oil*

* 95 *Q*.—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) எந்தெந்த ஜில்லாக்களிலே கவர்ன்மெண்டு நிலத்திலும், தனிப் பட்டவர்களுடைய நிலங்களிலும் சந்தன மரங்கள் இருக்கின்றன ?

(ஆ) எத்தனை ரூபாய் மதிப்புள்ள சந்தனக் கட்டை 1957, 1958-ம் வருஷங்களிலே விற்பனை செய்யப்பட்டது ?

(இ) சந்தனக் கட்டையிலிருந்து எண்ணெய் உற்பத்திச் செய்யும் தொழிற்சாலைகள் எந்தெந்த இடங்களிலே யார் யாரால் நடத்தப்பட்டு வருகின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) North Arcot, South Arcot, Salem, Coimbatore, Madurai, Nilgiris, Tirunelveli and Ramanathapuram districts.

| (*b*) *Year.* | *Revenue realised.* |
|---|---|
| (i) 1957 | Rs. 45,32,935·00 |
| (ii) 1958 | Rs. 7,18,002·00 |

(Up to January 1958.)

(realised at the auction sale of sandalwood in January 1958 at Satyamangalam sale depot).

(*c*) Factories for extraction of sandalwood are at Salem, Mettur Dam and Tirupattur. They are run by private individuals.

* 96 *Q*.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Home be pleased to state whether any final decision has been taken to start a sandalwood oil distillery in the public sector and, if so, what the details are?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is a proposal under consideration to work a pilot scheme and no decision has been taken yet on it.

SRI P. G. MANICKAM : தயாரிக்கப்படும் சந்தன எண்ணெ மற்ற தேசங்களுக்கு விற்பனை செய்ய அனுப்பப்படுகிறதா ? அல்லது அதை வைத்துக்கொண்டு இங்கேயே மற்ற இதரப் பொருள்கள் உற்பத்தி செய்யப் படுகிறதா ?